Regd. No: 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன்—301

ஆசிரியர்: P. B அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.



வருஷச் சந்தா ரூ. 10.    ஜீவியச் சந்தா ரூ. 10.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வா ரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில் குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

6—10—73ல் வெளியிடப்பட்டது

# ஸ்ரீ ராமாநுஜன் 301



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீமாந்ஸ்ரீ. P. B. அண்ணங்கராசாரியர்

| ஸம்புடம் 26 | ப்ரமாதீச ஹு<br>1973 புரட்டாசிமீ விஜயதசமிவெளியீடு | ஸஞ்சிகை 1 |
|---|---|---|

## புத்தாண்டு பிறப்பு விண்ணப்பம்

அன்பர்களே! நமது ஸ்ரீராமாநுஜன் இருபத்தைந்து ப்ராயங்களை இனிது கழித்து விஜயதசமியாகிய இன்று இருபத்தாறுவது ப்ராயத்தில் அடியிடுகின்றது. இதுகாறும் பேரருளாளனும் பெருந்தேவித்தாயாரும் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் ஜங்கம ஸ்ரீவிமானங்களும் செய்தருளின அனுக்ரஹ பலத்தினாலேயே நமது ஸ்ரீ ராமாநுஜன் எவ்விதமான இடையூறுமின்றி நடைபெற்றுவந்து உலகுக்கு உதவி செய்துள்ளது. அவ்வனுக்ரஹ பலம் ஒரு குறையுமின்றி மேன்மேலும் அபிவிருத்தியுடன் விளங்கிவரும் என்பது நமது திடமான நம்பிக்கை. இதைப்பற்றிப் புதிதாகப் பிரார்த்திக்க வேண்டாமாயினும் புருஷார்த்தமாகைக்காகப் பிரார்த்திப்பதும் செய்கிறோம். சில ச்லோகங்களையும் பாசுரங்களையும் அனுஸந்தித்து அஞ்சலி செய்வதுதான் நமது பிரார்த்தனை. ஜங்கம ஸ்ரீ விமானங்களென்னப்பட்ட பாகவதோத்தமர்களின் அனுக்ரஹத்தை விசேஷித்துப் பிரார்த்திக்கிறோம்.

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

பத்திரிகை நடத்துவதில் உண்டான பரிச்ரமத்தை நமது சந்தாதாரர்கள் அறியாதவர்கள் அல்லர். அவர்களின் பொருளுதவியே இதற்கு மூலாதாரமென்பதை நாம் விவரிக்க வேணுமோ? சந்தா செலுத்த வேண்டிய ஸமயத்தை அவரவர்கள் தெரிந்துகொண்டே இருக்கின்றார்கள். ஆனாலும் பலரும் மறந்திருக்

கிருர்கள் என்றே நினைக்க வேண்டியதாகிறது. சென்ற ஜனவரி மாதத்திலிருந்து இன்றுவரை சந்தாத்தொகை அனுப்பினவர்களின் இலக்கத்தைத் தெரிவிக்க லஜ்ஜிக்கிறோம். மூன்று வருஷங்களுக்கு முன்பு (அதாவது) ஸாதாரண வருஷத்தில் மணவாளமாமுனிகளின் அறுநூருண்டு கொண்டாட்டம் பிராப்தமான போது விசேஷ வெளியீடுகளை உத்தேசித்து அப்போது இருபத்தைந்து ரூபாய் செலுத்துமவர்களை ஜீவியச்சந்தாதாரர்களாகக் கருதுவோம் என்று வெளியிட்டிருந்தோம். அப்போது ஏறக்குறைய எண்பது நபர்கள் 25 ரூபாய் செலுத்தினுர்கள். அவர்களுக்கு 30 ரூபாய்க்கு மேற்பட்ட விலையுள்ள வெளியீடுகளை அனுப்பியுள்ளோம். முதலில் நாம் தெரிவித்திருந்தபடி அவர்களை ஜீவியச் சந்தாதாரர்களாகவே கொண்டு மறுபடியும் அவர்களிடம் சந்தாப்பணம் எதிர்பாராமல் இருப்போமென்று. ஆலோசித்துப் பார்த்ததில் காலநிலையின் கொடுமை அதற்குச் சிறிதும் இணங்கவில்லை. அப்போது 8 பேஜ் கொண்ட ஒரு பாரத்திற்கு அச்சுக்கூலி 15 ரூபாயும் அச்சுத்தாள் விலை 13 ரூபாயுமாக இருந்தது. இப்போது அவ்விரண்டும் மூன்றுமடங்கு அதிகமாக ஆகியுள்ளது. நாளுக்கு நாள் அதிகரித்தும் வருகிறது. இதை நாங்கள் தெரிவித்தே அவரவர்கள் தெரிந்துகொள்ள வேணுமென்பதில்லை. எங்கும் ஏகரீதியாக உள்ள விஷயம் இது. ஆகவே இப்போது கண்டிப்பாகத் தெரிவிப்பதை ஒவ்வொருவரும் கவனிக்கவேண்டும். பழைய வருடச்சந்தா பாக்கியையும் புதுவருடச்சந்தாவையும் அக்டோபர்மாத முடிவுக்குள் அனுப்புமவர்களுக்கே அடுத்த பத்திரிகை முதலாக அனுப்பப்படும். விஜயதசமிதான் வருஷாரம்பம் என்பதை அவரவர்கள் நினைவில் கொள்ள வேணும். அடுத்த பத்திரிகை பிள்ளைலோகாசாரியர் திருநட்சத்திரத்தன்று (முன் பின்னுக) வெளிவரும். அதற்குள் சந்தா அனுப்பாதவர்களுக்கு பத்திரிகை கிடைக்காது. சிலர் வழக்குப்பேசிக் கடிதம் எழுத நினைக்கக்கூடும். அந்த நினைவு வேண்டா.

## ★ பத்ராதிப ஸ்வாமியின் திருமேனி நிலைமை. ★

ஸ்ரீ ராமாநுஜன் ஆசிரியரும் அடியேனுக்கு மாதாமஹருமான ஸ்ரீமத் பிரதிவாதி பயங்கரம் ஸ்வாமியின் திருமேனி நிலைமையைப்பற்றிப் பலர் ஸ்வாமிக்கும். அடியேனுக்கும் கடிதங்கள் எழுதி வருகிருர்கள். சிலருக்கு நேரிலும் பதில் விஜ்ஞாபித்து வருகிறேன். பொதுவாக எல்லோரும் அறிய இவ்விதழில் விஜ்ஞாபிக்கிறேன், ஸ்ரீ ஸ்வாமிக்கு திருமேனியில் அபாடவம் ஏதுமில்லை. ஒரு வருடமாகத் திருக்கண் பார்வை குன்றியிருக்கிறதென்பது உலகமறிந்தது. சிகித்ஸை செய்துகொள்ள வேணுமென்றுநிச்சயித்து இருமுறை சென்னைக்கு எழுந்தருளியிருந்தும் வாய்ப்பு ஏற்படவில்லை. அடிக்கடி தேவப்பெருமாளுடைய உத்ஸவங்கள் ப்ராப்தமாகிறபடியால் அவற்றை இழக்க மனமில்லாமை பற்றியே தாமதமாகி வருகிறது. அனேகமாக நாளது ஐப்பசித் திருமூலத்திற்குமேல் நம்பிள்ளை உத்ஸவத்தொடக்கத்திற்கு முன்னுக சிகித்ஸை ஆகுமென்று எதிர்பார்க்கலாகிறது. வரும் தபால்களை வாசிப்பதோ அவரவர்களுக்கு பதில் எழுதுவதோ எதுவும் பராதீனமாகவே நடைபெற்று வருகிறது. ஸமீப காலத்தில் திருவாலிதிருநகரியிலும் சிறுபுலியூரிலும் நடந்த ஸம்ப்ரோக்ஷண

விசேஷங்களுக்கு ஸ்ரீ ஸ்வாமி எழுந்தருளாமைக்கு முக்கியமான காரணம் நேத்ர பாடவம் இல்லாமையே ஆகும். அவ்விடங்களில் எதிர்பார்த்திருந்த பலர் கடிதங்கள் எழுதிக்கொண்டே யிருப்பதால் இப்போது இது தெரிவிக்கலாகிறது.

திருமேனியில் திருநட்சத்திரத்திற்கு ஏற்ற அசக்திதவிர வேறு எவ்விதமான நோயுமில்லை. தேவப்பெருமாள் திருவீதிப் புறப்பாடுகளில் ஒன்றையும் இழப்பதில்லை. நித்ய கர்மாநுஷ்டானங்களுக்கு ஒரு குறையுமில்லை. ஸ்வாமி நடத்தி வரும் மாதப் பத்திரிகை ஸ்ரீ ராமாநுஜன் தவிர 'வைதிகமனோஹரா' என்கிற ஸம்ஸ்க்ருத பத்திரிகையும் 'ஸ்ரீ ராமாநுஜ பத்திரிக' என்கிற தெலுங்கு பத்திரிகையும் அடைவுடன் நடந்து வருகின்றன. ஆனால் விஷயங்களை ஸ்ரீ ஸ்வாமி நேராக தமது திருக்கையால் எழுத இயலவில்லை. விஷயங்களை அவர் ஸாதிக்க அடியேனும் அடியேன் போல்வார் மற்றும் சிலரும் எழுதி அச்சுக் கூடங்களுக்கு அனுப்பி வருகிறோம். அச்சுத்தாள் திருத்துவதையும் அடியோங்களே யதாசக்தி நிறைவேற்றி வருகிறோம். அதனால் ஏற்படும் அச்சுப் பிழைகளை மஹான்கள் க்ஷமித்தருளவேணும்.

க்ரந்தமாலா ஆபீஸ் கார்யதரிசி
காஞ்சீபுரம்-3.

தி. அ. அக்காரக்கனி
அனந்தாழ்வான்.

குறிப்பு:—ஸ்ரீ ராமாநுஜன் சந்தாப்பணம் அனுப்புமவர்கள் இந்த விலாஸத்திற்கே அனுப்பவேணும். (பத்ராதிபர்)

# பெரியாரின் பரமபத ப்ராப்தி

ஸ்ரீமதுபயவே. கச்சிக்கிடாம்பி யாமுனாசாரியஸ்வாமியை ஸ்ரீவைஷ்ணவ உலகமெல்லாம் அறியும். திருவயிந்திரபுரத்தில் நியாயவேதாந்த வித்வானாக எழுந்தருளியிருந்த கச்சிக்கிடாம்பி (அஷ்டகோத்ரம்) பாஷ்யகாராசார்ய ஸ்வாமியின் அத்விதீய திருக்குமாரராவர். இவர் நெடுநாள் திருமலை திருப்பதி தேவஸ்தான காலேஜில் ஆகம வித்வானாக எழுந்தருளியிருந்து பலரையும் உய்வித்தவர். உபய வேதாந்தக் கடலில் ஆழ்ந்தவர். அறுபத்துநான்கு ப்ராயங்களுக்கு உட்பட்டவர் திருமலை திருப்பதி தேவஸ்தான தர்சன நிர்வாஹகராயும் எழுந்தருளி யிருந்தவர். இவர் நேற்று ஆவணிமாத முடிவில் திருவல்லிக்கேணியில் திருநாடலங்கரித்தார் என்பதைத் தெரிவிக்க மிக வருந்துகிறோம். சரம கைங்கரியம் திருமலையில் நடைபெற்றுச் சிறப்பாகத் தலைக்கட்டியது. இவருடைய ஸ்தானத்தைப் பூர்த்தி செய்விக்கத் திருவேங்கடமுடையான் திருவுள்ளம் யாதோ அறியோம். இவரைப்பற்றி நாம் எழுதியனுப்பிய நிர்வேதமாலிகையான எட்டு ச்லோகங்களில் சிலவற்றை இங்குக் காண்மின் —

அஹீந்த்ரநகரோத்பவ: ப்ரபலபண்டிநாக்ரேஸர-ப்ரபூஜ்ய பத பாஷ்யக்ருத்-குருவராத்மஜ: ஸாத்விக:
வ்ருஷாசலபதே:ப்ரிய: ப்ரதிநயாமுநார்யாஹ்வய: விஹாய புவி மாத்ருசாந் அஹஹ திவ்யதாமாவிசத்.

லோகாசார்யவரோபயந்த்ருயமிராட்பாதாப்புஜன்மத்வய
ப்ராவண்யைகநிரூபணீயமஹிமா ஸ்ரீ யாமுனார்யஸ்ஸுதீ:,
ஸத்யம் ஸ்ரீகுலசேகரோக்திவிதயா ஸ்ரீசைலச்ருங்கே க்வசித்
திர்யங் ஜன்ம கிமப்யவாப்ய ரமதே ஜாநாதி தத்வேங்கட:.

ஆத்ரேயவம்ச கலசோததி சீதபாநோ! ஸ்ரீபாஷ்யகாரகுருவர்ய தநூஜரத்ந,
நித்யம் விவர்த்தய வ்ருஷாத்ரிபதேஸ்ஸபர்யாம் ஸர்வாம் ததீய பதபங்கஜயோர்நிலய.

# ஸ்ரீபெரும்பூதூர் மஹாக்ரதுவில் நடைபெற்ற ஸர்பாஷணையின் தொடர்ச்சி

(19—8—73) காலை வேளை ஸ்ரீபெரும்பூதூர் மஹாக்ரதுவின் முடிவுதினத்தில் நடந்த ஸம்பாஷணை முன்னித யில் ஸ்ரீ மதுராந்தகம் ஸ்வாமிக்கும் அடியேனுக்கும் நடந்த ஸ்வாமியோடு நடந்த ழில் வெளியிடப்பட்டது. அன்று பிற்பகலில் மீண்டும் அந்த ஸ்வாமியோடு நடந்த ஸம்பாஷணை இங்கு வெளியிடப்படுகின்றது. அசனசயன விச்ராந்திக்குப்பிறகு ஸ்வாமி காலை ஸ்ரீமதுபயவே மதுராந்தகம் வித்வான் வீரராகவாசாரியர் ஸ்வாமி காலை ஸங்கேதப்படியே ஸபா மேடைக்கு எழுந்தருளியாயிற்று. அரைமணி காலம் தாமத மாக வந்து சேர்ந்தார். தாமதத்தின் காரணத்தைத் தாமே முன்னம் ஸாதித்தார். (அதாவது) தாம் ஸ்ரீபெரும்பூதூர் வருவதற்காக ஸ்ரீரங்கத்திலிருந்து புறப்படும் போது எவ்வளவு தடைகள் ஏற்பட்டனவோ அவ்வளவு தடைகள் இப்பொழுதும் ஜாகையிலிருந்து ஸபைக்குப் புறப்படும் போது ஏற்பட்டனவாம். "நம்முடைய வித்வான்கள் யாருமில்லாமல் ப்ரதிபக்ஷ வித்வான்களே மலிந்திருக்குமிடத்திற்கு நீர் போகவே கூடாது" என்று தம்மினத்தவர்கள் சிலர் வலிதாகத் தடுத்ததாகவும் அதைப் பொருள் படுத்தாது தாம்புறப்பட்டு வந்ததாகவும், 'யாந்தி ந்யாயப்ரவ்ருத் தஸ்ய திர்யஞ்சோபி ஸஹாயதாம்" என்கிற முராரி ச்லோகத்தைத் தாம் அவர் களுக்குச் சொல்லிவிட்டு வந்ததாகவும் ஸாதித்தார். அன்று காலையில் கூடியிருந்த வித்வான்கள் யாவரும் வந்து சேர்ந்திருந்தனர். ஸம்பாஷணை தொடக்கமாயிற்று.

[(அண்) (மது) என்கிறமுறையிலே வினாவிடைகளைத் தெரிவிக்கிறேன் ]

(அண்) ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸித்தோபாயசோதநாதிகாரத்தில்- "இப்படி நாராயண சப்தத்தில் ஸித்தமான குணவிசேஷஸம்பந்தங்களடியாகப் பிறக்கும் கலக்கங்களுக்குப் பரிஹாரம் உதாஹரித்தோம்" என்று தலைக்கட்டி "இனி......ஸபத்நீகனுக்க் கொண்டு ஸர்வரக்ஷணயஜ்ஞதீக்ஷிதனான ஸர்வேச்வர னுக்கு ஸ்ரீமச்சப்தத்திலே சொல்லுகிற பத்நீஸம்பந்தத்தில் வரும் கலக்கங்களுக்கு திங்மாத்ரத்தாலே பரிஹாரம் காட்டுகிறோம்" என்று தொடங்கின வாக்யராசியிலே "ஸ்ரீஸூக்த பாஷ்யத்தில் பெரிய ஜீயரும் அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் உபபாதித்தார்" என்று ஸாதித்திருப்பது நினைவுக்கு வருகிறதா? பெரியஜீயர் ஸ்ரீஸூக்தபாஷ்யத்திலே எந்த அபேக்ஷிதார்த்தங்களை எப்படி உபபாதித்தார் என் பதைத் தேவரீர் விளக்க முடியுமா?

(மது) இது தேவரீருடைய நூல்களில் பலகால் கண்டதேயாகும். என்னைப் போன்ற பலவித்வான்கள் இந்த கேள்வியைக்கண்டே யிருக்கின்றார்கள். விடை வெளிவந்ததாகத் தெரியவில்லை. அடியேன் இங்கு விடைகூறவேண்டுமானால் இப் படித்தான் விடை கூறவேண்டும். (எப்படி யென்னில்) "பெரிய ஜீயர் என்றது எம்பெருமானார் காலம் தொடங்கித் திருமலை திருப்பதியில் ஒழிவில் காலமெல்லாம் உடனாய்மன்னி வழுவிலா வடிமைசெய்து வரும் பெரிய ஜீயர் பரம்பரையில் வருகின்றவரை அன்று. தேசிகனுடைய ஸமகாலத்திலோ சிறிது முற்காலத்திலோ இருந்த ஒரு ஜீயர் என்று கொள்ளவேணும். ஸ்ரீஸூக்த பாஷ்யத்தில் என்றது ஸ்ரீ ஸூக்தத்திற்கு அவர் செய்த வியாக்கியானத்தில் என்றபடி. "அபேக்ஷிதார்த்

தங்களை யெல்லாம் உபபாதித்தார் என்றது வேண்டிய பொருள்களையெல்லாம் விளங்கவைத்தார் என்றபடி'' என்றுதான் அடியேனே. அடியேன் போல்வாரோ விடைகூற முடியும். வைகுண்டவாஸியான ஸ்ரீ மதுபயவே. இஞ்சிமேட்டு ஸ்வாமியும் அவர்க்கு முற்பட்ட வ்யாக்யானகாரர்களும் இப்படித்தானே எழுதிவைத்திருக்கிறார்கள்! அதைவிட அதிகம் அடியேன் என்ன சொல்லமுடியும்?

(அவ்) இந்த வாக்கியத்திற்கு மேலே (அதே இடத்தில்) ''இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச் செய்தேயும் பற்றினது விடாதொழியில், த்ருடபூர்வ ச்ருதோ மூர்க்க:.........என்கிற தசையாம்'' இத்யாதி வாக்யமுள்ளதே, இதுவும் நினைவிருக்குமே, இங்குக் கேட்கிறேன். மத்யஸ்த த்ருஷ்டியாலே தோற்றின ப்ராமாணிகார்த்தங்கள் எவை? பற்றினது விடாமல் பிடிவாதமாகச் சொல்லுகிற அர்த்தம் எது? அப்படிச் சொல்லுகிறவர்கள் யார்? இதைச் சிறிது விளக்கி யருள முடியுமா?

(மது) ஆகா! விளக்குகிறேன். 'மத்யஸ்த த்ருஷ்டியாலே' என்றது நடுத்தரமான பார்வையாலே என்றபடி. 'ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச் செய்தேயும்' என்றது சரியான பொருள்கள் தோற்றச் செய்தேயும் என்றபடி. 'பற்றினது விடாதொழியில்' என்றது தாங்கள் கொண்ட அர்த்தத்தையே பிடித்துக் கொண்டு போராடினுல் என்றபடி. த்ருடபூர்வ ச்ருத: — பூர்வேப்ய: ச்ருதம்—பூர்வச்ருதம். தத் த்ருடம் யஸ்ய ஸ: த்ருடபூர்வச்ருத: = முன்னோர்களான ஆசார்யர்களிடத்தில் கேட்டதையே திடமாக வைத்துக் கொண்டிருப்பவன் மூர்க்கன் என்றபடி. அவரவர்கள் தங்கள் தங்கள் புத்தியைச் செலுத்தி அர்த்தங்கள் கண்டுபிடிக்க வேண்டியிருக்க அது செய்யாமல் முன்னோர் மொழிந்தவற்றைக்கேட்டு அவற்றையே திடமாகக் கொண்டிருப்பவன் மூர்க்கன் என்றபடி.

(அவ்) அடியேன் கேட்டவற்றைச் சரியாகத் திருவுள்ளம் பற்றாமல் ஏதோ ஸாதிக்கிறதே. மத்யஸ்தத்ருஷ்டியாலே தோற்றின அர்த்தம் எது? என்பது முதற்கேள்வி. பற்றினது விடாதே சொல்லப்படுகிற அர்த்தம் எது? என்பது இரண்டாவது கேள்வி. அப்படிச் சொல்லுகிறவர்கள் யாவர் என்பது மூன்றாவது கேள்வி. இவற்றுக்கன்றோ விடையருளவேணும்?

(மது கனைக்கிறார்; இருமல், தும்மல்களை வருவிக்கிறார். மறுபடியும் கனைக்கிறார். இதோ விண்ணப்பிக்கிறேன் என்கிறார். மீண்டும் கனைக்கிறார் அதாவது...அதாவது என்று ஆம்ரேடனம் செய்கிறார். சொல்லத் தொடங்கி விட்டார்.) (அதாவது) ரஹஸ்ய ரத்னவளியென்கிற ரஹஸ்யத்தில் ''ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்......ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு ப்ரஸஹமாய் ஸஹதர்மசாரிணியான பெரியபிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்'' என்றருளிச் செய்து, இதை ரஹஸ்ய ரத்நாவளீ ஹ்ருதயமென்கிற அடுத்த ரஹஸ்யத்திலே தாமே விவரித்தருளுகிறார். அது வினான விவரணம் என்று நினைக்க வொண்ணாதபடி ஒரு விசேஷமும் அதில் வைத்திருக்கிறார்.

அதாவது தஞ்சமாகின்ருள் என்பதற்கு ரக்ஷணஹேது வாகிருள் என்று விவரணம் காட்டப்பட்டது. பிராட்டி தான் ரக்ஷிக்கிருள் என்ருதே எம்பெருமான் செய்யும் ரக்ஷணத்திற்கு இவள் தான் ஹேதுவாகிருள் என்று ஸாதித்தாராயிருக்கிறது. இதையெல்லாம் தேவரீர் கல்வெட்டும் செப்பேடுமாக எடுத்துக் காட்டியிருந்து இங்கு அடியேனைத் தொண தொண வென்று கேட்டால் அடியேன் என்ன சொல்லுவது! பிராட்டிக்கு புருஷகாரத்வம் ஒழிய வேறு ஒன்றுமில்லையென்று கல்வெட்டு செய்திருக்கிற தேசிகன் அதற்கு முரணாக ஸாதிக்கப் ப்ரஸக்தியில்லை. "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷுணும் கடாக்ஷயா ஏஷா நிஷ்டேதிதி ஸர்வஸம்மதம்" என்றும் அருளிச்செய்தவர் தேசிகன். "அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யதயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணம் அநுக்ரஹே" என்றும் ஸாதித்தவர் தேசிகன். சதுச்லோகியில் "ச்ரேயோநஹ்யரவிந்தலோசனமன: காந்தாப்ரஸாதாத்ருதே ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்வஸு ந்ருணும் ஸம்பாவ்யதே கர்ஹிசித்" என்றவிடத்து பாஷ்யத்தில் பல ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளை உதாஹரித்து இதை நிலைநாட்டினவரும் தேசிகன். அப்படிப்பட்டவர் இங்கு ஸாதிப்பது அதற்கெல்லாம் முரணாக இருக்கத் தகாது. இருக்கிறதே என்ருல் ஆழ்ந்து ஆலோசித்துத்தான் ஆகவேண்டும். "காலக்ஷேபங்களில் இப்படிப்பட்ட முரணுன இடங்கள் வரும்போது ப்ரவசனகாரர்கள் ஸீமந்தப்ரஸ்தாபங்களையும் குசலப்ரச்னங்களையும் புகவிட்டு ஸமாப்தி செய்கிருர்கள்' 'என்று தேவரீர் எழுதுவது நன்ருக இல்லை என்று தோன்றுகிறது, "அவரவர் தாம்தாம் அறிந்தவாறேத்தி" என்று பொய்கையாழ்வார் அருளிச் செய்திருக்க வில்லையா?

(அண்) ஸீமந்தப்ரஸ்தாவாதிகளை அடியேன் எங்கும் எழுதியிருக்கவில்லை. அடியேன் ஜிஜ்ஞாஸு முறையில் கேட்கிறேனேயொழிய ஜிகீஷு முறையில் கேட்கிறேன் அல்லேன் என்று முதலிலேயே விண்ணப்பித்திருக்கிறேன். இப்படி இன்னும் சில கேள்விகள் கேட்க வேண்டியிருக்கிறது. கேட்கட்டுமா?

(மது) இன்று ஞாயிற்றுக்கிழமை அல்லவா? ராகுகாலம் தொடங்கிவிட்டது. அஞ்சுகிறேன். ஏற்கனவே தேவரீர் அடியேனை தர்மதர்மிஜ்ஞானம் இல்லாதவன் என்று பலகால் எழுதி யிருக்கிறது. நேற்று ஜீயர் ஸ்வாமி திருமுன்பேயும் ஸஸாக்ஷிகமாக மூதலித்திருக்கிறது. இதைப்பற்றி அடியேன் விஜ்ஞாபிப்பதை திருச்செவி சாத்தவேணும். மனிதர்களுக்கு ப்ரமம், ப்ரமாதம், விப்ரலிப்ஸை என்கிற மூன்று தோஷங்கள் உண்டு. இவற்றில் ப்ரமமும், ப்ரமாதமும் நம்மிஷ்டப்படி வருவதல்ல. தெய்வாதீனமாக வந்து விடுகின்றது. விப்ரலிப்ஸை என்பது அப்படிப்பட்டதன்று. பிறரை வஞ்சிக்க வேணுமென்கின்ற இச்சைதானே விப்ரலிப்ஸை என்பது; அது தெய்விகமன்று. சரணுகதிகத்யபாஷ்யத்தில் (ச்ருதப்ரகாசிகா) "ததுபாய ப்ரார்த்தநா" என்றவிடத்தில் அடியேன் எழுதின அபார்த்தமானது ப்ரமத்தாலும் அன்று, ப்ரமாதத்தாலும் அன்று; ஏமாறுகிறவர்கள் ஏமாறட்டுமே என்கிற எண்ணத்தினுல் தான் எழுதினது. அதனுல் என்னை தர்மதர்மிஜ்ஞான மற்றவன் என்று தேவரீர் ஸாதித்து விடலாமா?

(அண்) இந்த விசாரம் இப்போது ஏதுக்கு? மதுராந்தகம் ரங்கராஜாசாரியர் என்கிற ந்யாயவித்வான் இன்று காலை இங்கு வந்திருந்தார். இன்று பகலில்

அவர் ஊருக்குப் போய்விட்டதாகத் தெரிகிறது. இப்போது இந்த சர்ச்சை வேண்டாம். ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரஸ்தாவித்த விஷயங்களில் ஏதேனும் ஸாதிக்கத் திருவுள்ளமானால் ஸாதிப்பது. பூர்வோத்தர விரோதங்கள் இருப்பதாக தேவரீருடைய திருவுள்ளத்தில் நன்றாகப் பட்டிருக்கிறதே, தத்பரிஹாரம் செய்தருள முடியுமானால் செய்வது.

(மது) ''இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே'' இத்யாதி வாக்கியத்திற்கு இன்னது பொருள் என்று தெரிந்துகொண்டால் அன்றோ பூர்வோத்தர விரோதமென்ன ப்ரஸக்தி உள்ளது? பூர்வோத்தர விரோதம் கொண்டாலும் பாதகம் ஒன்றுமில்லையே! வ்யாகரண சாஸ்த்ரத்தில் ''விப்ரதிஷேதே பரம் கார்யம்'' என்பது ஒரு ஸூத்ரம். ''பூர்வத்ராஸித்தம்'' என்பது மற்றொரு ஸூத்ரம். ''ஸபாத ஸப்தாத்யாயீம் ப்ரதி த்ரிபாதீ அஸித்தா; த்ரிபாத்யாமபி பூர்வம் ப்ரதி பரம் சாஸ்த்ரம் அஸித்தம் ஸ்யாத்'' என்பது வ்ருத்தி. பரஸ்பர விரோத ப்ரசமநார்த்தமாக இந்த ஸூத்ரங்கள் அவதரித்தன. இதிலேயே பரஸ்பரவிரோதம் காண்கிறது.

ஒன்றிலே ''பரம்கார்யம்'' என்கிறது. மற்றொன்றிலே ''பரம்கார்யம் அஸித்தம் ஸ்யாத்'' என்கிறது. எதைத் தள்ளுவது? எதைக்கொள்ளுவது? ஆனாலும் அந்த சாஸ்த்ரங்கள் உன்மத்த ப்ரலபிதங்கள் அல்லவே. உச்சிமேல் வைத்து மெச்சப்படும் சாஸ்திரமல்லவா அது. அப்படியே ரஹஸ்யத்ரயஸாராதிகளிலும் பரஸ்பரவிரோதம் அகிஞ்சித்கரமென்று கொள்ளக் கடவதென்று பெரியார் பணிப்பது. ராகுகாலம் முற்றுகிறது. அடியேன் விடை பெற்றுக் கொள்ளுகிறேன். அடியேனும் ஊர்போய்ச் சேரவேண்டியிருக்கிறது.

## கடிதங்கள்

குறிப்பு:— பல பெரியார்கள் ஸ்ரீ ஸ்வாமி ஸந்நிதிக்கு எழுதும் கடிதங்களைப் பெரும்பாலும் அடியேன் தான் வாசித்துக் காட்டுவது. அப்படி வாசிக்கும்போது சில கடிதங்களைப் பத்திரிகையில் வெளியிட்டால் சிலபல அன்பர்களுக்கு உகப்பாயிருக்கும் என்று தோன்றியதனால் இதன் கீழ்ச் சில கடிதங்களை வெளியிடுகின்றேன்.

T. A. அனந்தாழ்வான்.

### கடிதம்-1

ஸ்ரீமான் உ. வே. டாக்டர் V. ராமஐயங்கார்,
பெங்களூர். 13—9—73.

ஸ்ரீமதித்யாதியாய் எழுந்தருளியிருக்கும் மஹாவித்வான் P. B. A. ஸ்வாமி ஸந்நிதியில் அடியேன் டாக்டர் ராம ஐயங்கார் தெண்டன் ஸமர்ப்பித்த விண்ணப்பம். உபயகுசலம். தொண்டைமண்டலம் ஸ்கூலில் ஸ்வாமி உபந்யாஸம் தொடங்கின நாள் முதல் ஸ்வாமியினிடம் அடியேனுக்கு ஒரு தனிப்பட்ட ஈடுபாடு. பார்வை குன்றியிருக்கும்போது பலவித அஸௌகர்யங்கள் ஏற்படும்.

பந்தயக் குதிரையைக் கட்டிப்போட்டால் அதன் சக்தி குறைவதில்லை. ஆனால் அது அந்த நிர்பந்தத்தைத் தாங்கவேண்டி யிருக்கிறது. ஸ்வாமிக்கு உடல், உயிர் எங்கும் ஞானம் பரந்திருக்கிறது. இது ஸுப்ரஸித்தம். கண்பார்வை மங்கி யிருந்தாலும் இந்த ஞானப்பெருக்குச் சிறிதும் குன்றுமலிருக்கிறது. பல நிகழ்ச்சி களில் ஸ்வாமி தலைமை தாங்கி அவற்றைப் பரிமளிக்கச் செய்து வருவது போற்றக்கூடிய விஷயம். சிங்கம் எங்கிருந்தாலும் எப்படி யிருந்தாலும் எல்லோருக்கும் அச்சம்தான். ஸ்ரீராமாநுஜனை ஸேவித்துக்கொண்டு வருகிறேன். பிரதிவாதிகளுக்கு பயங்கரமாகவே இருக்கிறது. பல தத்வார்த்தங்களை அலசி உண்மையை விளக்கிப் பலருடைய கலக்கங்களைத் தெளிவுபடுத்திக் கொண்டு வருகிறது. தத்வ விவரணங்களில் ஸ்வாமியின் ஸேவை கொஞ்சம்கூடக் குறையவில்லை. கண்பார்வை பாதிக்கப்பட்டிருந்தும் ஸ்வாமியின் ஸம்ப்ரதாய ஸேவை குன்றுமலிருப்பது எங்கள் பாக்யம். பகவானின் அருளுமாகும். ஸ்வாமி யினுல் ஸ்ரீவைஷ்ணவமும் ஸம்ப்ரதாயமும் தளராமல் மேன்மேலும் வலிமை பெற வேண்டும்.

தாஸன்

*Dr. V. ராம ஐயங்கார்*

## கடிதம்-2

T. VENKATAVARADAN,
Madras-35. 17—9—73.

ஸ்ரீஜகதாசார்ய ஸ்வாமியின் திருவடித் தாமரைகளில் அடியேன் திருச்சேறை வெங்கடவரதன் தெண்டனிட்டுச் செய்யும் விண்ணப்பம். உபயகுசலம்.

ஸ்ரீ ராமாநுஜனின் இருபத்தைந்தாமாண்டு நிறைவு மலரைக் கண்டேன். விஷயங்கள் முத்துக் குவியலாகவுள்ளன. சேமநிதியெனப் போற்றற்குரியன. அவற்றைச் சுவைக்குங்காலை ஓரிரு பாக்களெழுத ஆர்வமுற்றேன். ஸ்வாமிகள் அவற்றை உகந்தேற்க வேண்டுகிறேன்.

*(வெண்பாக்கள்)*

(1) இருபத்தைந் தாண்டுகளாய் ஏற்றவை ணவத்திற்
கொருபத் திரிகையா யுள்ள—அரிபத்தர்க்
காரா வமுதாக வண்ணலிரா மாநுசன்சீர்ப்
பேரால் தழைப்பதுநம் பேறு.

(2) ஆண்டு மலர்கண்டோம் ஆழ்ந்தபொரு ளாயிரங்கள்
நீண்டவற்றைத் துய்த்து நிறைவுற்றோம்—வேண்டிலமே
வேறு விளக்கங்கள் மேலோராம் பூருவர்நூற்
சாறுநம் மண்ண லுரை தான்.

(3) வாழியிரா மாநுசன் வாழியத னாசிரியன்
வாழியுல கார்யன் வகுத்தவழி—வாழியவே
நல்ல மணவாள நாமமிகு மாமுனிவன்
சொல்லைமறை யாகவுணர்ந் தோர்.

தாஸன், திருச்சேறை வெங்கடவரதன்.

# சிறுபுலியூர் ஸம்ப்ரோக்ஷணம்

திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம் பெற்ற சிறுபுலியூரில் க்ருபா ஸமுத்ரப்பெருமாள் ஸன்னிதி ஜீர்ணோத்தாரணம் 10—9—73ல் தொடங்கி 14—9—73 வரை விமரிசையாக நடந்தேறியது. இதை யொட்டி 20 ஹோம குண்டங்கள் கொண்ட யாகசாலை அமைக்கப்பட்டது. ரிக், யஜுஸ், ஸாம வேத பாராயண கோஷ்டியும், திவ்வியப் பிரபந்த அத்யாபக கோஷ்டியும் அதற் கிசைவாக இருந்தது. யாகசாலை ஸ்ரீ. உ. வே. கோயில் க. க. கண்ணன் ஸ்வாமி தலைமையிலும் வேத அத்யாபக கோஷ்டி ஸ்ரீ உ. வே. சிறுபுலியூர் அண்ணன் ஸ்வாமி தலைமையிலும் நடத்தப் பட்டது. அவ்வமயம் ஸ்ரீ. உ. வே. சிறுபுலியூர் அண்ணன் ஸ்வாமி, சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்மாசாரிய ஸ்வாமி, திருநாங்கூர் பிரதிவாதிபயங்கரம் ஸ்ரீனிவாஸாசாரிய ஸ்வாமி ஆகியவர்களால் ஸ்தல மாகாத்மியத்தைப் பற்றியும், ஸ்தல பாசுரங்களின் ஆழ்ந்த கருத்துக்களைப் பற்றியும் சிறந்த உபன்யாஸங்கள் செய்யப்பட்டன. கடைசி நாளன்று பகல் பெருமாள் தாயாருக்கு விசேஷ திருமஞ்சனத்திலும் இரவு கருட ஸேவையிலும் அருமா கட லமுதன் அருள் பொங்கியது. ஸ்ரீவைஷ்ணவ ததியாராதனை சிறப்பாக நடந்தது. திருப்பணிக் குழுவின் உபதலைவர் ஸ்ரீமான் உ. வே. R. ஜகந்நாத ஐயங்காருடைய முன்னேற்பாடுகளும் உபயதாரர்கள் மற்றும் ஸன்னிதி நிர்வாக அதிகாரியின் ஒத்துழைப்பும் திருக்குடந்தை சேஷாத்ரி ஐயங்காருடைய நிர்வாஹமும் குறிப்பிடத் தக்கதாய் இருந்தது.

இப்படிக்கு,
செயலாளர்கள்.

# பாதுகா ஸஹஸ்ரத்தில் ஒரு ஸுபாஷிதம்

இப்போது ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுருவின் மஹோத்ஸவம் நடைபெற்று வருகிறது. அவருடைய திவ்ய ஸூக்திகளில் ஒன்றை எடுத்தனுபவித்து ஆனந்திக்க விரும்புகிறோம். பாதுகா ஸஹஸ்ரத்தில் பல பத்ததிகள் அமைந்துள்ளன. அவற்றுள் ஸுபாஷிதபத்ததி என்பது ஒன்று. ஸுபாஷிதமாவது லோக நீதியைத் தெரிவிக்கும் லோக ரஞ்சகமான ச்லோகம். இப்படிப்பட்ட ச்லோகங்களைக் கொண்டு ஸ்ரீரங்கநாத பாதுகையின் பெருமையைப் பேசும் பத்ததி ஸுபாஷிதபத்ததி யாகும். அதிலுள்ள ஒரு ச்லோகம் கேண்மின்.

"ராமே ராஜ்யம் பிதுரபிமதம் ஸம்மதஞ்ச ப்ரஜாநாம்
மாதா வவ்ரே ததிஹ பரதே ஸத்யவாதீ ததௌ ச,
சிந்தாதீத: ஸமஜநி ததா பாதுகாக்ர்யாபிஷேக:
துர்விஜ்ஞாந ஸ்வஹ்ருதய மஹோ தைவமத்ர ப்ரமாணம்"

இந்த ச்லோகத்தின் இறுதியான பாதம் லோக நீதியையும் சாஸ்த்ரார்த்தத்தையும் தெரிவிப்பதாகும். அதாவது உலகில் நடக்கத்தகாதது ஒன்று நடந்துவிட்டால்

நாமெல்லாம் என்ன சொல்லுகிறோம்? 'தெய்வச் செயல்' என்கிறோம். 'பகவத் ஸங்கல்பம்' என்கிறோம். 'எம்பெருமான் எண்ணத்தை யாரேயறிவார்?' என்கிறோம். அதுதான் இங்குக் கடைசி பாதத்தில் 'துர்விஜ்ஞாநஸ்வஹ்ருதய மஹோ தைவமத்ர ப்ரமாணம்' என்பதில் தெரிவிக்கப்படுகிறது.

ச்லோகத்தின் பூர்த்தியான கருத்து என்னவென்றால் [ராமே ராஜ்யம் பிது: அபிமதம்] தசரத சக்ரவர்த்தியானவர் தமது மூத்த குமாரரான இராமபிரானுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் நடத்தவேணுமென்று பாரிப்புக் கொண்டார். அதைத் தாம் ஏகாகியாக முடித்துவிடாமல் எல்லோருடைய ஸம்மதியையும் கொண்டு நடத்தவேணுமென்று நிச்சயித்து பெரியதொரு கூட்டம் கூட்டி அவரவர்களின் கருத்தை வினவினர். [ஸம்மதஞ்ச ப்ரஜாஞம்] சக்ரவர்த்தியின் கருத்தை ஒருவர் கூட ஆட்சேபிக்க வில்லை. "அநேகவர்ஷ ஸாஹஸ்ர: வ்ருத்தஸ்த்வமஸி பார்த்திவ" என்று சொல்லத் தொடங்கி "இச்சாமோ ஹி மஹாபாஹும் ரகுவீரம் மஹாபலம், கஜேன மஹதாயாந்தம் ராமம் சத்ராவ்ருதானனம்" இத்யாதிகளைச் சொல்லி தங்களுடைய பூரிப்பை எல்லாரும் காட்டினர்கள். பிறகு என்ன நடக்கவேணும்? இராம பட்டாபிஷேகம் நடக்கவேணும். அது நடந்ததோ? இல்லை. [மாதா வவ்ரே ததிஹ பரதே] திடீரென்று கைகேயியானவள் வந்து கௌசல்யை மகனுக்குக் கூடாது. என்மகனான பரதனுக்குத்தான் இராஜ்ஜியமளிக்கவேணுமென்று வற்புறுத்தினள். [ஸத்யவாதீ ததௌ ச] சக்ரவர்த்தி எவ்வளவோ மன்றாடிப் பார்த்தும் பலன் பெறுமையால் ஸத்யத்திற்குக் கட்டுப்பட்ட அவன் பரதனே ஆளட்டும் என்று அனுமதி தந்தான். பிறகு என்ன நடக்கவேணும்? பரத மகுடாபிஷேகம் நடக்க வேணும். நடந்ததோ? இல்லை. பின்னை என்ன நடந்தது? [சிந்தாதீத: ஸமஜநி தத: பாதுகாக்ர்யாபிஷேக:] இராம பட்டாபிஷேகமுமில்லை; பரதபட்டாபிஷேகமுமில்லை. ஒருவரும் சிந்தியாத பாதுகா பட்டாபிஷேகமென்று ஒன்று நடந்தது. அந்தோ! தசரதன் பாரிப்பும் நிறைவேறவில்லை. கைகேயியின் பாரிப்பும் நிறைவேறவில்லை. ஒருவரும் பாரியாத பாதுகா பட்டாபிஷேகம் நடைபெற்றது. இந்த ஸம்பவத்தை நன்கு ஆலோசிக்குமிடத்து என்ன அறுதி யிடவேண்டி யிருக்கிறது? [துர்விஜ்ஞானஸ்வஹ்ருதய மஹோ தைவமத்ர ப்ரமாணம்] என்று தான் அறுதி யிட வேண்டியிருக்கிறது.

"நாமொன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கிறது" என்கிறோம் அல்லவா? பகவான்தான் சொல்லுகிறான்.—"அந்யோஹி அந்யச்சிந்தயதி ஸ்வச்சந்தம் விததாம்யஹம்" என்று. இதன் பொருள் யாதெனில், 'அவனவன் ஏதேதோ நினைக்கிறான், நான் நினைக்கிறபடிதான் நடத்தி முடிக்கிறேன்' என்பதாம்.

இதற்குச்சேர ஒரு மகாகவியின் ஸுபாஷிதம் கேளீர்—

"ராத்ரிர்கமிஷ்யதி பவிஷ்யதி ஸுப்ரபாதம்
பாஸ்வாநுதேஷ்யதி ஹஸிஷ்யதி பங்கஜஸ்ரீ:,
இத்தம் விசிந்தயதி கோசகதே த்விரேபே
ஹாஹந்த ஹந்த நளினீம் கஜ உஜ்ஜஹார"

இதன் கருத்து என்னவென்றால் ஒரு வண்டானது மாலைப் பொழுதில் திரியத் தொடங்கி ஒரு தாமரை யோடைக்கு வந்து தேர்ந்தது. அப்போது ஸூர்யப்ர காசமிருந்தபடியால் தாமரை சிறிது மலர்ந்திருந்தது. அதன் உள்ளே புகுந்தது வண்டு. புகுந்து மதுபானம் செய்துகொண்டே யிருந்தது. அவ்வளவிலே ஸூர்யன் அஸ்தமித்து விட்டான். தாமரை மூடிக்கொண்டது. உள்ளே கிடக்கும் வண்டு வெளிவருதற்கு எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தது. எப்படி வெளிவர முடியும்? ஸூர்யன உதித்த பிறகுதானே தாமரை மலரும்? அந்த வண்டு இரவு முழுதும் தாமரையினுள்ளே கிடக்கவேண்டியதாயிற்று. அப்போது அது சிந்திக்கின்றதாம். "இரவு கழியப் போகிறது, பொழுது விடியப் போகிறது. ஸூர்யன் உதிக்கப் போகிறான். தாமரை மலரப் போகிறது. அப்போது சரேலென்று கிளம்பிப் போய் விடுவோம்" என்று நினைக்கிறது. இப்படியே சிந்தித்துக் கொண்டிருக்கையில் ஒரு காட்டுயானை அந்தத் தாமரை யோடையில் வந்திறங்கி அங்குள்ள பூக்களையும் இலைகளையும் எல்லாம் வாரி வாய்ட்பெய்து விழுங்கி விட்டது. இந்த வண்டும் யானை வயிற்றினுள்ளே ஜீரணித்துவிட்டது. இதுதான் தெய்வச் செயல் என்பது.

மேலே எடுத்துச் காட்டின பாதுகாஸஹஸ்ர ச்லோகத்தில் "துர்விஜ்ஞாநஸ்வஹ்ருதயம்" என்கிற பதத்தைச் சிலர் 'துர்விஜ்ஞேயஸ்வஹ்ருதயம்' என்று திருத்துவார்கள். அது மிகத் தவறு. விஜ்ஞேயம் என்கிற பதம் உண்டு. அத்தோடு 'துர்' என்பது சேர்ந்தால் துர்விஜ்ஞாநம் என்றுதான் ஆகும். இது வியாகரணத்தின் முறை. துர்விஜ்ஞேயம் என்னக் கூடாது. வடமொழியில் 'துர்க்கட வ்ருத்தி' என்பது ஒரு நூல். அதில் ப்ராசீனப்ரயோகங்களை அபசப்தமென்று தள்ளி விடாமல் பொருந்தவைக்கும்வழி காட்டப்படுகின்றது. சிலருடைய நூல்களில் துர் விஜ்ஞேயபதம் இருப்பதாக எடுத்துக்காட்டி அதைச் சிரமப்பட்டு பொருந்த வைக் கிறது அந்நூலில். அந்தப் ப்ரயாஸம் இங்கு வேண்டா. ஸ்வாமி ஸாதித்த ஸ்ரீஸூக்தி 'துர்விஜ்ஞாந' என்பதே ஆகும். "அஸர்வஜ்ஞதுர்விஜ்ஞேயம்" என்கிற வார்த்தையும் உண்டு.

## அன்பர்களுக்கு அறிவிப்பு

ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் திருவரங்கம் பெரியகோயிலில் எழுந்தருளியிருக்கிறபடி, சாதுர் மாஸ்ய ஸங்கல்பம் யதாகாலம் செய்துகொள்ள முடியாமையால் ஸ்ரீபெரும்பூதூரில் மஹாக்ரது முடிந்தபிறகு ப்ராப்தமான பௌர்ணமாஸியில் அந்த ஸங்கல்பம் செய்துகொள்ளப் பட்டது. அவ்விடத்திலேயே ஒரு ஸம்வத்ஸரம் பூர்த்தியாக எழுந்தருளியிருக்கத் திருவுள்ளம் பற்றினபடி. கிழ உத்தர வீதியில் 13-நம்பர் மாளிகையில் எழுந்தருளி யிருக்கிறார். திருவுள்ளத்தில் ஓடுகிற ஸங்கல்பங்களை ஆரே அறிவார்? ஸ்வாமிக்கு ஸங்கல்ப விசேஷம் இல்லாமல் ஓரிரவும் கழியாதென்பதை உலகமறியும். 'அயோத்யாம் அடவீம் வித்தி' என்னுமா போலே ஸ்வாமி எழுந்தருளியிருக்கு மிடமே அயோத்தியாயும் அப்படிக் கல்லாத விடம் அடவியாகவும் கருதத் தக்கதென்பதில் ஐயமுண்டோ? ஸ்ரீஸ்வாமியை சிறுபுலியூர் ஸம்ப்ரோக்ஷணத்தில் ஸேவிக்கக் குதூஹலித்திருந்தவர்கள் ஏமாற்றமடைந்ததற்குக் காரணம் இந்த ஸங்கல்ப விசேஷமேயாகும்.

நித்யஸ்ரீ: நித்யமங்களம்.

(ச்லோ.) பஞ்சத்ரிம்சே வயஸி விவிதாந் ஸத்க்ரதூந் திக்ஷு திக்ஷு
ப்ராரப்யைதே யதிபரிப்ருடா: ஸத்யஸங்கல்பபூம்நா,
நிர்வர்த்ய த்ராகதுலமமலம் ஸத்யச: ப்ராபுரேவம்
பூயோ பூயோ புவி சிரமமீ ஸத்க்ரதூந் ஸாதயந்து.

(2) ஸ்மயமாந முகாம்போஜாந் ஸத்யஸங்கல்ப ஸம்ஜ்ஞகாந்,
ஸ்ரீமந் நாராயணசார்யாந் ஸேவத்வம் யதிசேகராந்.



(3) ஸத்யஸங்கல்ப ஸம்ஜ்ஞோஸ்தி ஸர்வசேஷிணி சப்தத:,
ஸேயம் ப்ரத்யக்ஷதஸ்ஸத்யம் யதீந்த்ரேஸ்மிந் ஸுபுஷ்கலா.

(4) ஜ்ஞாந பக்தி விரக்தீநாம் ஸமவாயஸ்வரூபிணீ
த்ரிதண்ட மண்டிதா மூர்த்திஸ் ஸேயம் ஜீயாத் சிரம் புவி.

(5) ஆஸேது சீதாசலமத்ர ப்ருத்வ்யாம்
ஸத்க்ருத்ய ப்ருந்தாநி பரச்சதாநி,
குர்வந்த ஏதே யதிஸார்வபௌமா:
ஸ்ரீபாஷ்யகாராத்த்வ விவர்த்தகாஸ்ஸ்யு:.

# போலி வைணவர் பொய்யுரை மறுப்பு

(முன் தொடர்ச்சி)

'வரலாற்றில் பிறந்த வைணவம்' என்னும் சுவடியிலுள்ள அபத்தங்களைச் சென்றவிதழில் எடுத்துக்காட்டியதே போதும். ஆயினும் 'அதற்கு பதில் வரவில்லை. இதற்குப் பதில் வரவில்லை' என்று வீணான அட்டஹாஸம் செய்வராதலால் அவகாசமுள்ளபோதெல்லாம் அதிலுள்ள அஸம்பத்தங்களை யெடுத்துக்காட்டிக் களைந்தே திருகிறோம். நப்பின்னைப் பிராட்டியைப்பற்றி இவர் எழுதியுள்ளார். "நீளா என்ற பெயர் கருநிறமுடையவள் என்ற பொருள் உடையது. இவளைத் தமிழ் நூல்கள் 'பின்னை' என்று குறிப்பிடுகின்றன. லக்ஷ்மி, பூதேவி இவர்களுக்குப் பின்வந்தவள் என்று பொருள். லக்ஷ்மியும் பூமியும் குறிப்பிட்ட அவதாரத்தோடு ஸம்பந்தம் உடையவரல்லர். பின்னை கண்ணனுடைய மாமன்மகள். ஆயர் மடமகள் எனப் படுபவள். ஏழுகாளைகளை வென்று இவளைக் கண்ணன் மணந்து கொண்டதாக ஆழ்வார் 'காம்பணைதோள் பின்னைக்கா ஏறுடன் ஏழ் செற்றதுவும்' என்று குறிப்பிடுகிறார். வடமொழிப் புராணங்களில் இவளுக்கு இடமில்லை" என்று. இங்கு நாம் இவரை இரண்டொரு கேள்விகளை கேட்கிறோம். வடமொழிப்புராணங்களையெல்லாம் பார்த்திருக்கிறீரா? அஷ்டாதச புராணங்களையும் பார்க்க வேண்டா; ஸ்ரீ விஷ்ணுபுராணாதிகளான சிற்சில புராணங்களையாவது பார்த்திருக்கிறீரா? இதிஹாஸ புராணங்களிலுள்ளவற்றை ப்ரமாணமாகக் கொள்ளுகிறீரா?—இவ்விரண்டு கேள்விகளுக்கும் இவரிடம் நேர்மையான விடை எதிர்பார்க்க முடியாது. கண்ணபிரானுடைய திவ்யமஹிஷிகளில் மிகச் சிறப்பாகச் சொல்லப் படுகிற ருக்மிணிப்பிராட்டியைப் பற்றின பாசுரங்கள் திவ்வியப்பிரபந்தங்களில் இரண்டு மூன்றுக்கு மேலில்லை. நப்பின்னைப் பிராட்டியைப்பற்றின பாசுரங்களோ வென்னில் நாலாயிரத்தில் நானூறு பாசுரங்களுக்குமேல் தேறும். கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் எழுந்தருளியிருந்த காலத்தில் நப்பின்னை மனமுவந்த மஹிஷியாகக் கொள்ளப்பட்டதனால் ஆழ்வார்களில் இருவர் மூவர் தவிர மற்றையோரெல்லாரும் இவளைப் பற்றியே வாய்வெருவுகின்றார்கள். வேதாந்த தேசிகன் யாதவாப்யுதய காவ்யத்தில நாலாவது ஸர்க்கத்தில் (98) "திசாகஜாநாமிவ சாக்கராணும் ச்ருங்காக்ர நிர்பிந்ந சிலோச்சயாநாம் ஸ தாத்ருசா பஹுபலேந கண்டாந் நிபீட்ய லேபே பணிதேந நீளாம்" என்கிற ச்லோகத்தினால் நப்பின்னைப் பிராட்டியை மணம் புணர்ந்த வரலாற்றைப் பணித்துள்ளார். அங்கு வ்யாக்யான கர்த்தாவான அப்பயதீக்ஷிதர், ஏறுதழுவிய கதையை விரிவாக எழுதி இக்கதை ஹரிவம்சத்திலுள்ளதாகப் பொறித்திருக்கின்றார். 'ஏவம் ஹரி வம்சே கதா' என்பது அவருடைய வாக்கு. இதை நாம் இன்று புதிதாக எடுத்துக் காட்டுகிறோமல்லோம். நமது திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையிலும் நப்பின்னைப்பிராட்டியின் அவதார ரஹஸ்யம் முதலான தனிப்பட்ட நூல்களிலும் பலகால் விளக்கியுள்ளோம். அப்பய தீக்ஷிதர் இப்போலி வைணவர்க்கு ஆசார்ய ப்ராசார்ய பரமாசார்யர்களிலும் மேம்படப் போற்றத் தக்கவரல்லவா? அவர் தாம் காணாத கதையை எழுதிவைப்பரா? தேசிகன் தாமும் இதிஹாஸ புராணங்களில் காணாத வரலாற்றுக்கு ச்லோகமிடு

வரா? நப்பின்னை கண்ணனுடைய மாமன் மகள் என்கிறார் இவ்வக்னிஹோத்ரி. இவர் இதை எந்த ப்ரமாணம்கொண்டு தெரிந்து கொண்டார்? நாம் கேட்டவற்றுக்கு உடனடியாக விடைதருவாராயின் உலகம் உண்மையுணரும். இவர் தாம் எழுதுவதை வேதத்தினும் மேம்பட்டதாகக் கருதுகிறார். இருளும் மருளுமே வடிவெடுத்த இவருடைய வாசகங்களில் ஒன்று கூட ஏற்கத் தக்க தன்றென்பதை நாம் விரிவுக்கஞ்சாமல் முதலித்துவருகிறோம். இவருடைய அபத்தக் களஞ்சியத்தில் இந்த வார்த்தைகளைக் கேண்மின்.

"பாஞ்சராத்ர ஆகமங்களில் வைகுந்தத்தில் லக்ஷ்மிக்கே பகவான் பக்கத்தில் இடம்சொல்லப்படுகிறது. ஏனைய இருவரும் லக்ஷ்மியின் அவதாரமானதால் இவர்களுக்கு அவதாரகாலத்தில் பூலோகத்தில் இடம் இருக்குமே தவிர வைகுந்தத்தில் இடம் ஏற்பட வாய்ப்பு இல்லை. கிருஷ்ணாவதாரத்தில் தோன்றிய நப்பின்னை வைகுந்தத்தில் எப்படி இடம் பெற்றிருக்க முடியும் என்பது புலப்படவில்லை" என்று. இங்கு நாம் தெரிவிப்பவை ஒரு ப்ரமாணத்துக்கும் கட்டுப்படாத இவரை நோக்கியல்ல. உண்மையான பல வைணவமணிகட்குத் தோன்றியுள்ள கலக்கங்களைப் போக்குவதற்காகவேயாம். ஸ்ரீராமாயணத்தில் இராகவன் ஸமுந்ர சரணாகதி செய்கின்ற வரலாற்றைக் கூறுகின்ற வால்மீகி பகவான் (யுத்த-21) "பாஹும் புஜக போகாபம் உபதாய அரிஸூதந: அஞ்ஜலிம்.........ப்ரதிசிச்யே மஹோததே:" என்கிறார். பெருமாள் தம்முடைய பாஹுவைத் தலையணையாகக் கொண்டு கடற்கரையிலே சயனித்தார் என்றபடி. இங்கு பாஹும் என்றதற்கு ஒரு விசேஷணமிடுகிறார் முனிவர் "புஜை: பரம நாரீணாம் அபிம்ருஷ்டம் அநேகதா" என்று. கண்ணபிரானுடைய பாஹுவுக்கு இந்த விசேஷணமிருந்தால் இந்தக் கேள்வி பிறவாது. "பிறர் மக்களை மையன்மை செய்துத்தோளாலிட்டவரோடு திளைத்து நீ சொல்லப்படாதன செய்தாய்" போன்ற பல பாசுரங்கள் கை கொடுக்கும். சக்கவர்த்தி திருமகனுருடைய பாஹுவைப் பற்றி உத்தரராம சரிதத்தில் பவபூதிமஹாகவி அற்புதமாக ஒரு ச்லோகம் இயற்றியுள்ளார். (அதாவது) ஆவிவாஹஸமயாத் க்ருஹே வநே சைசவே ததநு யௌவநே புந:, ஸ்வாபஹேது: அநுபாச்ரித: அந்யயா ராமபாஹுருபதாந மேஷ தே" என்பது. பிராட்டி திருவயிறு வாய்த்தவளவில் தலைக்கு அணையிட்டுக் கொள்ளாமல் சயனித்திருந்த போது பெருமாள் தம்முடைய பாஹுவைத் தலையணையாகக் கொள்ளும்படி வேண்டி அவர் திருவாக்காலே சொல்லுகிற ச்லோகமாக அமைக்கப்பட்டது. இதில் "அந்யயா அநுபாச்ரித: பாஹு:" என்று சிறப்பித்துக் கூறப்பட்ட ராமபாஹுவுக்கு பரமநாரிணாம் புஜை: அநேகதா அபிம்ருஷ்டத்வம் சொல்லுவது எங்ஙனே பொருந்துமென்னில்: இங்கு கோவிந்தராஜீய வ்யாக்யனத்தில் பெரிய திருமலை நம்பி பக்கலில் நம் பாஷ்யகாரர் கேட்டருளின அர்த்தம் விவரிக்கப்பட்டுள்ளது காண்க. இராமபிரான் "ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்" என்று சொல்லிக் கொண்டாலும் "தத்ஸர்வம் தர்ம வீர்யேண யதாவத் ஸம்ப்ரபச்யதி" என்று வரம்பெற்ற வால்மீகி பகவான் உண்மையை அறிந்தவராகையாலும் அயோத்யா காண்ட உபக்ரமத்தில் "ஸஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ்ஸநாதந:" என்று தமது வாக்காலே ஸ்பஷ்டமாகக் கூறியிருந்தலானும்

இங்கு இங்ஙனே வ்யாக்யானம் செய்ததில் தவறென்றுமில்லை. "பரம நாரீணாம்" என்றது கபிஞ்ஜலாதிகரண ந்யாயத்தாலே மூன்று திவ்யமஹிஷிகளைக் குறித்தே தீரும். அவர்கள் தாம் ஸ்ரீ பூமி நீளா தேவிகள். இவர்களுடைய புஜங்களாலே தடவிக் கொடுக்கப்பட்டவை என்று கோவிந்தராஜர் விவரிக்கிறார். நம்மாழ்வார் இம் மூவரையும் சேர்த்து அநுபவித்துப்பேசின பாசுரங்களைக் காட்டுகிறோம். திருவிருத்தத்தில் மூன்றாவது பாசுரம் "குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவும் நிழல்போல்வனர் கண்டு நிற்குங்கொல் மீளுங்கொல்" எனபதாம். திருவாய்மொழியில் 'உடனமர் காதல்மகளிர் திருமகள் மண்மகள் ஆயர் மடமகள்' 'கூந்தல் மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும் குலவாயர் கொழுந்துக்கும் கேள்வன் தன்னை' என்றிப்படிப் பலவிருந்தாலும் ஒன்றிரண்டு காட்டினோம் நீளாதேவியை 'குழற்கோவலர் மடப்பாவை' என்றும் 'ஆயர் மடமகள்' என்றும் 'குலவாயர் கொழுந்து' என்றுமுள்ள சொற்களாலேயே ஆழ்வார் குறிப்பிடுவதன் கருத்தை இவர் அறியப் பிறந்திலர். ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் "விஷ்ணோர் தேஹாநுரூபாம் வை கரோத்யேஷா ஆத்மநஸ்தநும், ராகவத்வே அபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ண ஜந்மநி" இத்யாதி ச்லோகங்கள் கோடி காட்டப்பட்டவை. ஸ்ரீ மஹாலக்ஷ்மியே ஜநகாத்மஜையாக அவதரித்தாள். பூமிப் பிராட்டியே ஆண்டாளாக அவதரித்தாள். இதை வேதாந்த தேசிகன் கோதாஸ்துதியில் "ஸாக்ஷாத் க்ஷமாம் கருணயா கமலாமிவாந்யாம்" என்கிற ச்லோகத்தினால் மூதலித்தார். அதில் பல ச்லோகங்களில் ஆண்டாளை "வஸுதே!" என்றே ஸம்போதிக்கிறார். நப்பின்னைப் பிராட்டி நீளாதேவியின் அம்சமாகத் தோன்றினது கொண்டே "நீலாகுலேந ஸத்ருசீ கில ருக்மிணீ ச" என்று கூரத்தாழ்வானும் "நீளா துங்கஸ்தநகிரிதடஸுப்தம்" என்று பட்டரும் யாதவாப்யுதயத்தில் தேசிகனும் குறிப்பிட்டார்கள். ஆயர்மடமகளான நப்பின்னைப் பிராட்டி பரமபதத்திற்குச் சென்று நீளையாக ஆகிவிட்டதாக ஒருவரும் சொல்லவில்லை. பரமபதத்திலிருந்த நீளாதேவி இங்கு ஆயர் மடமகளாக அதாவது நப்பின்னையாக அவதரித்தாள் என்றே சொல்லுவது. இவளிடத்தில் பெரியபிராட்டியாருடைய அம்சமும் பொருந்தியிருப்பது கொண்டே திருப்பாவையில் ஆண்டாள், "நப்பின்னை நங்காய் திருவே துயிலெழாய்" என்றருளிச் செய்தாள். ஆக, நீளா என்கிற திருநாமத்தின் ஸ்தானத்திலேயே ஆயர் மடமகள், குலவாயர் கொழுந்து இத்யாதி திருநாமங்கள் அருளிச்செயல்களில் வழங்குவனவென்று தெளிக.

எம்பெருமானுடைய திவ்ய மஹிஷிகளில் நீளா என்னும் பெயரையுடைய ஒரு வ்யக்தி அடியோடு கிடையாது என்கிறாரா இவர்? அல்லது நப்பின்னையாகத் திருவவதாரம் செய்தவள் நீளாதேவியல்லள் என்கிறாரா? இரண்டும் சொல்ல முடியாது. வைதிக கோஷ்டிகளில் அநாதிகாலமாக புருஷ ஸூக்தம், ஸ்ரீ ஸூக்தம், பூ ஸூக்தம், நீளா ஸூக்தம் என்கிற நான்கு ஸூக்தங்கள் ஓதப்பட்டு வருகின்றன. எம்பெருமானார் சரணாகதி கத்யத்தில் "ஏவம்பூத பூமி நீளா நாயக!" என்று எம்பெருமானை ஸம்போதிக்கிறார். (இடையில் ஒரு சிறு விஷயம்) எம்பெருமானார் அருளிச்செய்த க்ரந்தங்கள் ஒன்பது என்று வேதாந்த தேசிகன்

அருளிச் செய்கிறார். ஒன்பது என்று மொத்தமாகச் சொல்லிவிடவில்லை. ஒவ்வொன்றின் திருநாமத்தையும் தனிப்பட நிர்தேசிக்கிறார். ஸ்வாமி காலத்திலிருந்து நம்பெருமாள் ஸன்னிதியில் பங்குனி உத்தரத்தன்று அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் கத்யத்ரயம் அநுஸந்திக்கப்பட்டு வருகிறது. ஸ்வாமி காலத்திலேயே இருந்த எங்களாழ்வான் சரணாகதிகத்ய வ்யாக்யானம் ஸாதித்திருக்கிறார். ச்ருதப்ரகாசிகாபட்டரும் ஸாதித்திருக்கிறார். ஆச்சான்பிள்ளையும் வேதாந்த தேசிகனும் மூன்று கத்யங்களுக்கும் வ்யாக்யானமிட்டிருக்கிறார்கள். இந்த கத்யத்ரயம் எம்பெருமானார் அருளியதா அன்று என்கிற விப்ரதிபத்தி ஸ்ரீ வைஷ்ணவ வுலகில் இதுகாறும் தோன்றியதில்லை. திடீரென்று இவர் தோன்றி "ஸ்ரீ ராமாநுஜர் செய்ததாகச் சொல்லப்படுகிற கத்யம்" என்றெழுதிவிட்டால் இவரைப் "பித்துக் கொள்ளி" என்றல்லது வேறு என்ன சொல்லலாகும்? "ஆர்ஷ க்ரந்தங்களில் எது எது உமக்கு ப்ரமாணம்? ஆசார்ய க்ரந்தங்களில் எது எது உமக்கு ப்ரமாணம்?" என்று கேட்டால் வாய்திறக்க வழியுண்டோ இவர்க்கு? "முகமஸ்தீதி பாஷணம்" என்றும் "பாணிரஸ்தீதி லேகநம்" என்றும் சொல்லுவதுண்டு வாயில் வந்தபடி பேசிவிட வேண்டியது, கைபோனபடி எழுதிவிட வேண்டியது என்கிற முறையில்தானே இவர் பேசுவதும் எழுதுவதும். இனி நீளா தேவியைப் பற்றித் தலைக்கட்டுவோம். ஸ்ரீ பாஷ்யகாரர் திருவடிகளில் ஸகலார்த்தங்களையும் கேட்டு உய்ந்தவரான கூரத்தாழ்வான் தமது ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் ஸ்ரீ வைகுண்டாநுபவம் செய்யுமடைவில் "தேவ்யா ச்ரியா ஸஹ வஸந்தம் அநந்த போகே புஞ்ஜீய ஸாஞ்ஜலி: அஸங்குசிதாக்ஷி பக்ஷ்மா" என்று பெரியபிராட்டியாரை அநுபவித்து உடனே பூமிப் பிராட்டியையும் நீளாதேவியையும் தனித்தனி ச்லோகங்களாலே அநுபவிக்கிறார். இவருடைய திருக்குமாரரான பட்டரும் ஸ்ரீ குண ரத்ன கோசத்திலே "யத் தூரே மநஸ:" என்கிற ச்லோகத்தினால் பெரிய பிராட்டியாருக்காகவே ஸ்ரீ வைகுண்டம் அமைந்ததாக அருளிச்செய்து மேலே "தேவி த்வாமநு நீலயா ஸஹ மஹீ,தேவ்யஸ் ஸஹஸ்ரம் ததா யாபிஸ்த்வம் ஸ்தந பாஹு த்ருஷ்டிபிரிவ ஸ்வாபி:ப்ரியம் ச்லாகஸே" என்றருளிச் செய்துள்ளார். ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கே வேதத்தில் இடமில்லை என்கிறார் போலிவைணவர். இவர்க்கு முடிவாகச் சொல்லுகிறேன். நம்முடைய க்ருஷ்ணயஜுர் வேதத்தில் ஆறாவது காண்டத் தொடக்கத்தில் "கோஹி தத் வேத யத்யமுஷ்மிந் லோகே அஸ்தி வா ந வேதி" என்றோதப் படுகிறது. இதன் பொருள் அநாயாஸமாக யாவரும் அறியக்கூடியது. இஹ லோக பொழிய பரலோகமென்று ஒன்று உண்டென்று யார் கண்டார்? என்கிறது. அதன்படி பரமபதத்துக்கே வேதத்தில் இடமில்லாத போது எம்பெருமானுக்கோ மஹிஷிகளுக்கோ இடம் எங்கே கிடைக்கும்?

ஸ்ரீ வைஷ்ணவ குடும்பத்தில், அதிலும் வ்யபதிஷ்ட குடும்பத்தில் தோன்றினவர் ஸ்ரீ வைஷ்ணவ வுலகம் முழுவதும் வயிறுபிடிக்கும்படியான அபசப்தங்களை நிரப்பி வெளியிட்டுள்ள ஒரு சுவடியைப் பொருள்படுத்தி நம்முடைய அருமருந்தான காலத்தை வீணாக்குவதுபற்றி அடிக்கடி நாம் வருந்த நேர்கின்றது. மது பானத்துக்கு மக்ஷிகா நிரஸனமும் ஆவச்யகமாகையாலே இதுவும் கைங்கர்யத்தில் சேருமென்றே நினைக்கிறோம். ஸ்ரீ பாஷ்யத்தில் 'ஸப்தபங்கீ' என்று ஒன்று எடுத்துக் காட்டுகிறார். அந்த மதம் எங்கிருக்கிறதென்று நெடுநாள் ஆலோசித்து வந்தோம். திருக்குடந்தையிலிருப்பதாக அறிகின்றோம். (தொடரும்)

# அபூர்வார்த்த ரத்னநிதி

(முன் தொடர்ச்சி)

## 62. எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும்

திருமழிசைப்பிரான் அருளிச்செய்த நான்முகன் திருவந்தாதியில் முப்பத்தெட்டாம் பாசுரமான *அகைப்பில் மனிசரை என்ற பாசுரத்தின் பின்னடிகள் "எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும் அப்போ தொழியுமழைப்பு" என்பவாம். இப்பின்னடிகளே முக்கியமானவை. திருவாய்மொழியில் (1-1-5) "அவரவர் தமதமதறிவறிவகைவகை அவரவரிறையவர் எனவடியடைவர்கள் அவரவரிறையவர் குறைவிலரிறையவர் அவரவர் விதிவழி அடைய நின்றனரே" என்ற பாசுரத்தின் பொருளைத் தெரிந்துகொண்டபின் இப்பாட்டின் பொருள் நன்கு நெஞ்சில் பதியும். அப்பாசுரத்தின் கருத்தாவது—பலவகைப் பயன்களை விரும்புகின்ற உலகத்தவர்கள் தங்கள் தங்கள் ருசிக்குத் தக்கபடி பிரமன், சிவன், இந்திரன் என்றுள்ள பலபல தெய்வங்களை ஆச்ரயிக்கின்றனர்; அத்தெய்வங்கள் இவர்கள் விரும்பிய பலன்களைக் கொடுக்கக் குறையில்லை; ஏனென்றால் ஸர்வேச்வரனான ஸ்ரீமன் நாராயணன் அத்தெய்வங்களுக்கு அந்தர்யாமியாயிருப்பதனால் அந்த மாஹாத்மியத்தினால் அத்தெய்வங்கள் பலன் கொடுக்கும் சக்தியுடையனவாக ஆய்விடுகின்றன என்க. ஆகவே எம்பெருமானுடைய ஆவேசத்தினால்தான் ஸாமாந்ய தெய்வங்களெல்லாம் தங்களைப்பற்றின அபேக்ஷகர்களுக்கு அந்தந்த ப்ரயோஜனங்களை அளிக்கின்றனவென்றதாயிற்று.

இப்பாட்டின் கருத்தே திருமழிசைப்பிரான் பாசுரத்தில் விளங்குகிறது. (உகைக்குமேல்) உகைத்தலாவது உபேக்ஷித்தல்; தேவதாந்தரங்களிடத்தில் தான் ஆவேசியாத பக்ஷத்தில் என்றபடி. எத்தேவர் வாலாட்டும்—பிரமன் உலகங்களைப் படைத்தானென்றும், சிவன் திரிபுரமெரித்தானென்றும், இந்திரன் வ்ருத்ராஸுர வதம் பண்ணினானென்றும் இப்படிப் பல தெய்வங்களைக் குறித்துப் பேசுவதெல்லாம் தெரியுமே; எம்பெருமான் அநுப்ரவேசித்திராவிடில் ஒரு தெய்வமாவது ஒரு காரியமாவது செய்திருக்க முடியுமோ? என்றவாறு. "வாலாட்டும்" என்றது உலக வழக்கச் சொல்லின் அநுகாரம். அஹங்காரப்படுகிறவனை "வாலாட்டுகிறான்" என்பது வழக்கம். "எவ்வாறு செய்கையும்"—அந்தணர்கள் யஜ்ஞ யாகங்களை அநுஷ்டித்து "இந்த்ராய ஸ்வாஹா, ஸோமாய ஸ்வாஹா" என்றிப்படிச் சொல்லி ஹவிஸ்ஸை அளிப்பதெல்லாம் அந்தர்யாமித்வேந எம்பெருமானை உத்தேசித்தேயன்றோ! அந்த இந்திரன் முதலிய தெய்வங்களில் எம்பெருமான் உள்ளுறைகின்றிலனாயின் அத்தெய்வங்களை நோக்கி "ஸ்வாஹா ஸ்வாஹா" என்று சொல்லிச் செய்வது ஒன்றுமில்லையாகும். அழைப்பு—"இந்த்ராகச்ச ஹரிவ ஆகச்ச மேதாதிதே" (தைத்திரீய ஆரண்யகம் முதல் ப்ரச்நம்) என்றும் "ப்ரஹ்மாண மாவாஹயாமி, வருண மாவாஹயாமி" என்றும் சொல்லுகிறபடியே தேவதாந்தரங்களை யழைப்பதும் ஒய்ந்து விடும் என்கை.

# 63. எம்பெருமானார் அபயப்ரதாவம்

ஸ்ரீராமாயணத்தில் அபயப்ரதானமென்பது ஒரு கெட்டம். விபீஷணாழ்வான் மிகுந்த ஆர்த்தியோடு கடற்கரையிலே வந்து சரணாகதி செய்தபோது ஸுக்ரீவ மஹாராஜர் முதலானோர் அவனை அங்கீகரிக்கலாகாதென்று வலிதாக ஆக்ஷேபித்த காலத்தில் அவனுடைய வுள்ளம் சாலவுமஞ்சிக் கிடந்தது. அச்சமயத்தில் பெருமாள் அவனுக்கு அபய மளித்தார். அப்போது பெருமாளருளிச் செய்த *ஸக்ருதேவ ப்ரபந்நாய* என்கிற சரமச்லோகத்திலே 'அபயம் ததாமி' என்கிற வாக்கிய மிருப்பதனால் அந்த கெட்டம் அபயப்ரதாந கெட்டமென்று வழங்கப்பட்டு வருகிறது. ஸ்வாமி யெம்பெருமானார் ஒருநாள் ஒரு பெரிய திருவோலக்கத்திலே அந்த கெட்டத்தை மிக விரிவாக உபந்யஸித்தருளா நின்றார். *த்யக்த்வா புத்ராம்ச்ச தாராம்ச்ச ராகவம் சரணம் கத:* என்கிறபடியே புறம்புண்டானபற்றுக்களையுடைய வாஸனையோடே விட்டு விபீஷணாழ்வான் 'ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே, நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷண முபஸ்த்திதம்* என்று சொல்லி வானர முதலிகளைப் ப்ரார்த்திக்க, அவர்கள் இவ்விபீஷணனை அநுகூலனாகக் கொள்ளாமல் ப்ரதிகூலனாகவே கொண்டு அவன்மீது கற்களை விட்டெறிவது, பெருமாளிடம் ஆக்ஷேபிப்பது முதலாகப் பல தீமைகளை யிழைக்கத் தொடங்கினார்கள்—என்னுமிவ்விஷயத்தை ஸ்வாமி உபந்யஸித்தருளா நிற்கையில் அப்போது ஆனந்தமாகக் கேட்டுக்கொண்டிருந்தவர்களில் ஒருவரான பிள்ளையுறங்காவில்லிதாஸர் கோஷ்டியில் நின்று எழுந்து விக்கிவிக்கியழுது தம்முடைய வொரு பெரிய ஸந்தேஹத்தை விண்ணப்பஞ்செய்து அதைப் பரிஹரித்தருளினலொழிய மேல் கதை கேட்க விருப்பமில்லாமையைக் கூறி நின்றார்.

அவர் விஜ்ஞாபித்த ஸந்தேஹமாவது—"விபீஷணாழ்வான் உண்மையான பரமபக்தன்; அவனுக்கு ஆர்த்தி முதலிய அதிகார பூர்த்தியில் யாதொரு குறையுமில்லை; ஆகிஞ்சந்யமும் அநந்ய கதித்வமும் கபடமாகவல்லாமல் உண்மையாகவே உண்டாகி நெஞ்சுகனிந்த பக்தியுடன் வந்து சேர்ந்த இவனுக்கே பகவத் கோஷ்டியில் ப்ரவேசம் எளிதாகக் கிடைக்கவில்லை யென்றும், பகவானுக்கு அந்தரங்க மந்திரிகளாக இருந்தவர்களால் மிகுந்த பரிபவமும் ஆக்ஷேபமும் விளைந்தன வென்றும் கண்டால், அவ்விபீஷணாழ்வானுடைய அதிகாரத்தில் நூற்றிலொன்றுகூட இல்லாத எம்போலியர்க்கு பகவதங்கீகாரத்தைக் கனவில் கூடக் காண்பதற்கு ப்ரஸக்தியில்லையன்றோ; ஆகவே எம்போலியர் உஜ்ஜீவிக்க வழியுண்டோ இல்லையோ! என்று நெஞ்சு தளும்பி நிற்கின்றது" என்பதாக.

இது எல்லோருக்குமே ஜனிக்கவேண்டிய ஸந்தேஹந்தான். ஆனால் அந்த ஸமயத்தில் பிள்ளையுறங்கா வில்லிதாஸரொருவர்க்கே ஜனித்தது. இந்த ஸந்தேஹத்திற்குப் பரிஹாரமுறை என்னவென்று தெரிந்துகொள்ள ஒவ்வொருவரும் குதூஹலங்கொள்ள வேண்டியதே யாகும். கேண்மின். எம்பெருமானார் உடனே அவர்க்குப் பரமத்ருப்திகரமாகப் பணித்த ஸமாதானம் யாதெனில்; விபீஷணாழ்வானைப் போலே நாம் எம்பெருமானைப் பற்றினலன்றே இப்படி ஸந்தேஹித்து இடிவிழுந்து நிற்கவேண்டும். நாம் எம்பெருமான் கைபார்த்

திருக்கு மவர்களல்லோங்காணும்; உமக்கு நானுண்டு, எனக்குப் பெரிய நம்பி யுண்டு..........."

இதன் கருத்தாவது. எம்பெருமான் மோக்ஷமளிக்கவும் வல்லவன், மேன்மேலும் ஸம்ஸாரத்திலே தள்ளவும் வல்லவன். நிக்ரஹாநுக்ரஹங்களுக்குப்பொதுவான ஸ்வாதந்திரிய முடையவனுகையாலே அவனைப் பற்றினூர்க்கு நெஞ்சு தளும்பியே கிடக்க நேரும். அவனைப் போலன்றிக்கே அநுக்ரஹமே வடிவெடுத்த ஆசாரியர் களைப் பற்றினூர்க்கு ஸந்தேஹ கந்தமுமின்றிக்கே மார்விலே கைவைத்து உறங் கலாம்படியிருக்கும் என்கை. இவ்வர்த்தம் மஹர்ஷிகளின் வசனத்தாலும் தேறி நின்றது. * ஸித்திர் பவதி வா நேதி ஸம்சயோச்யுத ஸேவிநாம், ந ஸம்சயோஸ்தி தத்பக்தபரிசர்யா ரதாத்மநாம் * என்கிற ப்ரமாணத்தை இங்கே அநுஸந்திப்பது. இதன் பொருள்; எம்பெருமானைப் பற்றினூர்க்கு ஸத்கதி ப்ராப்தியாகிற ஸித்தி யுண்டோ இல்லையோ என்கிற ஸந்தேஹமுள்ளது; தத் பக்தர்களாகிற பாகவதர் களைப் பற்றினூர்க்கு அப்படிப்பட்ட ஸந்தேஹம் உதிக்கவே மாட்டாது என்பதாம்.

இங்ஙனே அவரவர்கள் தம் தம் ஆசாரியர்களைப் பணிந்து உஜ்ஜீவித்த லென்பது இருக்கச் செய்தேயும் *தஸ்மிந் ராமாநுஜார்யே குருரிதி ச பதம் பாதி நாந்யத்ர* என்று பூருவர்கள் ஒருபடிருக நிஷ்கர்ஷித்திருக்கையாலே ஆசார்ய ரென்கிற சொல்லுக்குப் பொருளாயிருக்குந் தன்மை எம்பெருமானு ரொருவர்க்கே உரித்தாகவுள்ளதாதலால் அவருடைய திருவடி ஸம்பந்தத்தை அநுதிநமும் சிந்தித்திருப்பார்க்கு விசாரலேசமுமில்லை யென்று தெளிவது.

## 64. ஏசநின்ற வெம்பெருமான் எவ்வுள்கிடந்தானே

திருமங்கையாழ்வார் திருவெவ்வுளூரெம்பெருமானை அநுபவிக்கும் பதிகத் தில் (பெரிய திருமொழி 2-2) "வேயினன்ன தோள்மடவார் வெண்ணெயுண்டானிவ னென்று ஏச நின்ற எம்பெருமான்" என்றருளிச் செய்கிறார். பழிப்பதும் பரிஹஸிப் பதும் ஏசுவதாகும். எம்பெருமானை அவிவேகிகள் பரிஹஸித்தாலும் பரமபக்தர் கள் அதை அநுவதிப்பதும் பிசகல்லவா? ஆண்டாள் தனது திருமொழியில் (12-8) "கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப்பெற்றான் காடுவாழ் சாதியுமாகப் பெற்றான் பற்றி உரலிடையாப்புமுண்டான்" என்றருளிச் செய்து உடனே "பாவிகாளுங் களுக் கேச்சுக் கொலோ" என்கிறாள். 'கண்ணபிரான் கற்றினம் மேய்த்தது முத லானவற்றை நாங்கள் குணமாக நினைத்து உள்குழையாநிற்க இதெல்லாம் பிறர்க்கு ஏசுதற்கிடமாவதே!' என்று வருந்திப் பேசுகிறபடியிது. அப்படியிருக்க 'ஏச நின்ற எம்பெருமான்' என்று முத்திரையிட்டுப் பேசலாமோ ஆழ்வார்? என்ற கேள்வி பிறக்கும். *பாவிகாளுங்களுக் கேச்சுக்கொலோ என்ற விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யான ஸ்ரீஸூக்தி. "நீங்கள் ஏதேனும் சிசுபாலன் பிறந்த லக்னத்தில் பிறந்தீர்களோ?" என்பது. இதன் ஆழ்ந்த கருத்தை அறிவதரிது. எம்பெருமானுடைய செய்கைகளைப் பரமபக்தர்களும் பேசுகிறார்கள், சிசுபாலஜ்ஞாதி களும் பேசுகிறார்கள். பேச்சில் சிறிதும் வாசியில்லை. பாவபந்தத்தில்தான் வாசி. நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் *ஏசியே யாயினும் ஈன்துழாய் மாயனையே பேசியே போக்காய் பிழை* என்கிறார். இதுவொரு அற்புதமான அருளிச்செயல்.

